சரசுவதி மகால் வெளியீட்டு எண். 334

# அக்காலத்துச் சித்த வைத்தியப் பலமுறைகள்




சரசுவதி மகால் நூலகம்

தஞ்சாவூர்.

1993] [விலை ரூ. 10-00

தஞ்சாவூர் சரசுவதி மகால் வெளியீட்டு எண். 334.

# அக்காலத்துச் சித்த வைத்தியப் பலமுறைகள்

சிறப்புக்கௌரவப் பதிப்பாசிரியர் :

டாக்டர் மு. நந்தகுமார்,

தஞ்சாவூர்.




தஞ்சாவூர் மகாராஜா சரபோஜியின்

சரசுவதி மகால் நூலகம்,

தஞ்சாவூர்.

1993] [விலை ரூ. 10—00

## நூற்பதிப்பு விளக்கக் குறிப்பு



| | | |
|---|---|---|
| நூற்பெயர் | : | அக்காலத்துச் சித்த வைத்தியப் பலமுறைகள் |
| பதிப்பாசிரியர் | : | டாக்டர் மு. நந்தகுமார் |
| வெளியிடுபவர் | : | இயக்குநர், சரசுவதி மகால் |
| வெளியீட்டு எண் | : | 334 |
| மொழி | : | தமிழ் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு |
| வெளியீட்டு நாள் | : | ஆகஸ்டு, 1993. |
| தாள் | : | 14. 2 கிலோ-சேஷசாயி |
| நூல் அளவு | : | 21 X 14 செ.மீ. |
| பக்கங்கள் | : | 84 |
| படிகள் | : | 1000 |
| எழுத்து | : | 12 புள்ளி |
| அச்சிட்டோர் | : | சரசுவதி மகால் நூலக அச்சகம் |
| புத்தகக்கட்டு | : | மெலிந்த அட்டை |
| பொருள் | : | மருத்துவம் |
| விலை | : | ரூ. 10—00 |

# வெளியீட்டாளர் முகவுரை

சரசுவதி மகால் நூலகம் பயனுள்ள சித்த மருத்துவ நூல்களைத் தொடர்ந்து வெளியிட்டு வருகின்றது. அவ்வரிசையில் இப்பொழுது "அக்காலத்துச் சித்த வைத்தியப் பலமுறைகள்" என்னும் நூல் வெளியிடப்படுகின்றது.

இந்நூல் சரசுவதி மகால் நூலகத் தமிழ்த் துறையைச் சார்ந்த 330 ஆம் எண்ணிட்ட ஓலைச் சுவடியை அடிப்படையாகக் கொண்டு பதிப்பிக்கப் பெற்றுள்ளது.

இந்நூலில் சயம், கணை, வாய்வு, சுரம், அஸ்தி சுரம், இருமல், அக்கி, சருவ விஷம், மேக நோய், பீனிசநோய் முதலிய நோய்களுக்கு மருந்துகள், செய்யும் முறைகள் பற்றியும் உளுவை லேகியம், கடுகுலேகியம், சக்தி லேகியம் முதலானவற்றைத் தயாரிப்பது பற்றியும் குறிப் பிடப்பெற்றுள்ளது. இந்நூலை மருத்துவர் திரு. மு. நந்தகுமார் அவர்கள் பதிப்பித்துத் தந்திருக்கின்றார். பதிப்பாசிரியருக்கு என் பாராட்டுகள்.

இந்நூலையும், இதுபோன்ற பல அரிய நூல்களையும் அச்சிட்டு வெளியிட நிதியுதவி புரிந்து வரும் நடுவண் அரசுக்கு எனது நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலைச் செம்மையான முறையில் அச்சிட்டுத் தந்த நூலக அச்சகத்தார் அனைவருக்கும் எனது பாராட்டுகள்.

இந்நூல் மருத்துவ அறிஞர்களுக்கும் பொது மக்களுக்கும் பயன்படுதல் என்பது திண்ணம்.

தி. சண்முக ராஜேஸ்வரன், இ. ஆ. ப.,
*மாவட்ட ஆட்சியர் மற்றும் இயக்குநர் (பொ)*
*சரசுவதி மகால் நூலகம்.*

*தஞ்சாவூர்*
*24—8—1993*



# முன்னுரை

அக்காலத்துச் சித்தர்கள் சித்து, ஞானம், யோகம் ஆகியவைகளை நன்கு கற்றுக்கொண்டு உலக மக்களுக்குத் தொண்டு செய்ய வேண்டும் என்பதற்காகவும், உலக மக்களின் பிணிகளைப் போக்கவும் அக்காலத்துச் சித்தர்கள் அவர்கள் கற்றறிந்த இயற்கையாகக் கிடைக்கும் மூலிகை மருந்து வகைகளைப் பயன்படுத்தி மருந்துகளாகச் செய்து நோய் உள்ளவர்களுக்குக் கொடுத்து நோய்களைக் குணப் படுத்தி இருக்கிறார்கள். இந்த நிலையில் சித்தர்கள் அவர் கள் அனுபவத்தில் கற்றுத் தெரிந்த சில உண்மைகளின் ரகசியங்களையும், மருந்து செய்யும் முறைகளையும் மிக விரிவாகவும், மற்றவர்களுக்கு உடன் புரிந்து கொள்ளாத அளவிற்கும் ஓலைச்சுவடியின் மூலமாக எழுதி வைத்திருக் கிறார்கள்.

இப்படி எழுதப்பட்டதன் நோக்கம் இக்காலத்து மக்களுக்குப் பயன்பட வேண்டும் என்பதற்காகக் கணக்கில் அடங்காத அளவிற்கு அக்காலத்துச் சித்தர்கள் ஓலைச்சுவடி யின் மூலமாக எழுதி வைத்திருக்கிறார்கள். அப்படி எழுதி வைத்த சுவடிகளில் சுவடி எண் 330 கை நகல் எண் 1758 ஒரு பகுதியானது இந்தச் சுவடியில் குறிக்கப்பட்டிருக்கும் மருந்து முறைகளைப்பற்றிப் பிரித்துப்பார்க்கும் பொழுது மருந்து வகைகளைச் சுத்தி செய்யும் முறைகளைப்பற்றி அதிகமாகச் சொல்லப்பட்டிருக்கிறது. அதிலும் விஷமுள்ள மருந்துகளையும் சுத்தி செய்யும் முறைகளையும் குறிக்கப் பட்டிருக்கிறது. மேலும் விஷக்கடிக்கு மருந்துகள் பற்றிக் குறிப்பிடப்பட்டதில் அஞ்சனம் முறை (கலிக்கம்) சிகிச்சை செய்யும் முறையையும் இம்மருந்தின் வகைகளைப் பற்றியும் செய்யும் முறையைப்பற்றியும் குறிக்கப்பட்டிருக்கிறது.

இத்தகைய சிகிச்சையை அக்காலத்தில் மிகச் சிறந்த முறையில் உபயோகப்படுத்திக் கொண்டிருக்கிறார்கள் என்பதை இச்சுவடியின் மூலமாக நாம் காண்கிறோம்.

அதே வேளையில் இத்தகைய மருந்துகளை உபயோகப் படுத்தினால் சகல விஷங்களும் முறிந்து விரைவில் குணமளித்திருக்கிறது என்ற நம்பிக்கையில் சித்தர்கள் இதனை மிக உயர்ந்த மருந்தாகவும் நினைத்து இந்தச் சுவடியில் எழுதி வைத்திருக்கிறார்கள். இத்துடன் சில கடைச்சரக்குகளின் மூலமாக லேகியம், சூரணம், இந்த மருந்துகளைப் பற்றியும் உபயோகத்தைப்பற்றியும் குறிக்கப்பட்டுள்ளது இவையெல்லாம் அடங்கிய இந்தச்சுவடியின் கருத்தைப் பிரித்துத் தெளிவாக அச்சுப்புத்தகமாக அச்சிட்டு மக்களுக்குத் தெளிவாக வாசிக்கப் பயன்பட வேண்டும் என்ற நோக்கத்தில் மத்திய அரசும், மாநில அரசும், நிதி உதவி செய்துகொண்டிருப்பது ஒரு மகிழ்ச்சிக்குரிய விஷயமாகும். இப்படிப்பட்ட நன்மைகளைச் செய்து வரும் மத்திய மாநில அரசாங்கத்துக்கும் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கிறேன். மேலும் சரஸ்வதி மஹால் இயக்குநர் அவர்களுக்கும் மற்றும் ஏனைய பணியாளர்களுக்கும் என்னுடைய நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

டாக்டர் **மு. நந்தகுமார்**

குறிப்பு-1

இந்தச் சுவடியில் குறிக்கப்பட்டிருக்கும் மருந்துமுறை பாடல்களின் பிழைகள் திருத்தப்படவில்லை. விளக்கத்தில் திருத்தி எழுதப்பட்டுள்ளது. இதற்குக் காரணம் அக்காலத்துச் சொல் அமைப்புகள், எழுத்து வடிவங்கள், அழியாதிருக்க, இக்காலத்து மக்கள் தெரிந்து கொள்ள வேண்டுமென்பதற்காக மூலப்பாடல்களின் பிழைகளைத் திருத்தம்

செய்யவில்லை என்பதை வாசகர்களுக்கு அன்புடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

## குறிப்பு-2

இச்சுவடி மிகவும் பழைமையானது. தற்சமயம் இச்சுவடியின் நிலை மிக மிக நசிந்து காணப்படுகிறது. மேலும் இச்சுவடியில் பல ஏடுகள் இல்லையென்றும் இந்தச் சுவடியை 19—6—1965 ஆம் ஆண்டு நகல் செய்யும் போது குறிப்பிட்டிருக்கிறார்கள். அதே வேளையில் இச்சுவடி தொகுப்பாக இல்லை என்பதையும் இன்னும் அதிகமான விளக்கத்தைக் கொடுக்க முடியவில்லை என்பதையும் வாசகர்களுக்கு அன்புடன் தெரிவித்துக்கொள்கிறேன்.



# வேண்டுகோள்



கருணையுள்ளங்கொண்ட நம் முன்னோர்கள், அரிய பெரிய இலக்கியங்களையும், பிறவற்றையும், பனையோலைகளில் எழுதிச் சுவடிகளாக நமக்குத் தந்தனர். அவை, பல்வேறு இடங்களில் முடங்கி உள்ளன. சுவடிகள் பழுதடைவதற்குமுன் சரசுவதி மகாலுக்கு அன்பளிப்பாகக் கொடுத்துதவினால், அவை மக்களுக்குப் பயன்படும்.

மகாலுக்குக் கொடுப்பதன் மூலம், சுவடி தந்தவர்களும், சுவடி எழுதியோரும் அழியாப் புகழை, பெருமைசால் சரசுவதி மகால் உள்ளளவும் பெறுவர். அவை பதிப்பாகி வருமாயின் சுவடி தந்தார் பெயர் இடம் பெறுவதோடு, அப்பதிப்பில் ஐந்து பிரதிகளும் பெறுவர்.

எனவே, "நாம் பெற்ற பேறு பெறுக இவ் வையகம்" என்ற எண்ணமுடைய நற்பண்பாளர்கள் தம்மிடமுள்ள சுவடிகளைச் சரசுவதி மகாலுக்குத் தந்துதவ வேண்டுகிறேன்.

*தஞ்சாவூர்,*
*24—8—93.*

*தி. சண்முக ராஜேஸ்வரன், இ.ஆ.ப.,*
*மாவட்ட ஆட்சியர் மற்றும் இயக்குநர்,*
*சரசுவதி மகால் நூலகம்.*

# பொருளடக்கம்



அக்காலத்து

# சித்த வைத்திய பல முறைகள்

## முடிதாரம், முதார்சிங், தொண்டி பாஷாணம், தொண்டி, நாவி, மடல், துத்தம், இவைகள் சுத்தி செய்யும் முறை

சுவடி மருந்து முறை 1

தாக்கிய சாணும் மத்தி சித்தர் மூலிச் சாறு சேரத்தரை
திரி
பலாதி வத்திய கிசாய்ந்த தன்னக்கும் வளமை சேளே
(நுசு)
கேளு நீ யமுலைச் சத்தி கிளத்திடும் சுதியித்து நாரு நீ
நாகப் பட்டை ........ தாய்கினை சாயஞ் செய்து
வாளி நீ வெவ்வேறாக மத்திக் கருவ ந்த மாகும் நீ
பலந்தான் சூதம் வெங்குகக் கேளே (நுலு)
கேளு நீ பனையின் எள்ளுக் கொடிய தாய்பபடி
நாலுக்குள்
வாறா ந கிளி யாகக் கட்டி வத்தெரி வளமை யாகுந்
தூளு
நீ சுத்தி யாச்சு துண்மையாஞ் சுத்தியப்பா வாளிது தார
சிங்கி யனை னுட சுத்தி கேளே (துய)
அதினுட சுத்தி யென்ன ஆட்டி நீர் தளிர் காச்ச வதன
மாந்தோண்டி வரிசையாய் வளமாய்க் கேளு சுனை மா
முலைப் பாலொடு
சுத்தி வெள்ளாட்டுப் பாலு பதனமா யொவ்
வொன்னுக்குள்

தாளிகை பத்துப் பத்தே (ஸுக)
பத்துப்பத்தாக ஊரப் பாத்திட ........ யாச்சு
முத்து முத்தான தொட்டியத்னுட முறையைக் கேளு
சத்து சத்தாக வெட்டித் தானொ ........ கட்டி
கொத்து கொத்தாக நெல்லில் வித்திக்கு குளிப்பாரே (நுஉ.)
குறியென்ன கழுவிப் போடு ........ சுத்தியுரி வெண்ணைய
தளிரம் போடு நாளிரல் ஞூ நித் தேரிப்பாட தயிருக்
குள்ளே செ ........ மறி வென்னக் குமரிச் சாற்றில் மஞ்சள்
சாத்தினில் ஒரு நாளே (நுநு)
வேயெறு நாளு ........ புலத்திப் போடு பாரிது நல்ல சத்தி
பச்சையின் துருசு கேளுப் பாரொரு பசுநீர் நாலு படியுங்குள்
ளெரிந்து வாய்ச் சிருடன் குருவி வெய்யில் சிரப் புடனுரை வைய்யே (றுலு)
வைத்திடச் சுத்தி யாச்சு மருவிய சசுத்தி ...... வேளை
கைத்திரு நார்த்தங் காய்ச் சார்ரினில் ஊரப் போடு
பைத்ரிக் கல்லும் போட பகந்திட நல்ல சுத்தி கைத்திரு
மஞ்சள்க் கலச் சுத்தியை நவிலக் கேளே (லுரு) கேள்ப்பா
பளச் சாறுக்குள் நாளிகை அனுபத்தாகும் வெளப்பா
கழுவி வெயியில் முகத்திலின் ...... .. யாகம் வணங்கும்
கடிகள்ப்பல தாமே (ய)

**விளக்கம்**

1) முடிதாரம் சுத்தி செய்யும் முறை : முடிதாரத்தை நான்கு லிட்டர் பனங்க கல்லில் கிழிகட்டி எரித்துக் கொண்டால் சுத்தியாகும்.

## 2) முனுதார் சிங்க - சுத்தி செய்யும் முறை

முதார் சிங்கியை வெள்ளாட்டு கோமியத்தில் ஒரு நாழிகை கொதிக்க வைத்து எடுத்துக் கொண்டால் சுத்தியாகும்.

## 3) தொண்டிபாஷாணம் - சுத்தி செய்யும் முறை

தொண்டி பாஷாணத்தைத் துண்டு துண்டாக செய்து கிழிகட்டி நெல்லில் அவித்து எடுத்தால் சுத்தியாகும்

## 4) தொண்டி - சுத்தி செய்யும் முறை

தொண்டியை முலைப்பாலிலும், வெள்ளாட்டுப் பாலிலும் தனித்தனியாக பத்து நாழிகை ஊற வைத்து எடுத்துக் கொண்டால் சுத்தியாகும்.

முறை 2 தொண்டி பாஷாணத்தை சூரவித்து துணியில் வைத்து முடிச்சுப் போட்டு கோமூத்திரத்தில் தோலா யந்திரத்தில் மூன்று நாள் எரித்தால் சுத்தியாகும்.

## 5) நாவி சுத்தி செய்யும் முறை

நாவியைப் பருத்தியிலைச் சாற்றிலும் முத்திலைக்குள் வைத்து எடுத்தால் சுத்தியாகும்

நாவியைக் குப்பியில் சொரிதி ஒரு நாழி கழித்து எடுத்து சிந்தில் கியாழத்தில் தொலாந்திரம் கட்டி எரித்து பிறகு எருக்கம் பாலில் கொஞ்ச நேரம் ஊறவைத்து எடுத்துக் கோமியத்தில் கழுவி எடுத்துக் கொண்டால் சுத்தியாகும்.

## 6) மடல் துத்தம் சுத்தி செய்யும் முறை

வெண்ணெய் அல்லது தயிர், கற்றாழை சாற்றில் ஊற வைத்துக் கொண்டால் சுத்தியாகும்.

## கறுவ விசத்துக்கு அஞ்சனம் : மருந்து

சுவடி மருந்து முறை 2

யந்தன் குடிகை யாருக்குத் ………
சொன்னால் மகர சொடமுண்டு சிவ
ஞானம் விசி வாசிகளுக்குள் சொல்லலாம்
குமர குருபரன் துணை குருபாதம்
துள்ளான வாளம் நீலலுடன் துய்ய
மடையன் திறிகு வெள்ள
உள்ளியிவை யெட்டும் விரவே யெழும்
மிச்சம் சாற்றில் உள்ளபடியே
உருண்டை செய்து உரைத்து நயனத்
தளிலேழுத அள்ளி விடமுண்டான
அருள் அந்தவன் கழகொண்ட
விடம் வந்தவனுடலுந் தன்
தில்லையால் அவளகம் கொண்டது
மில்லையால
இந்த வனுடலுந்தின் தவவிடம் அந்த
வனுடலில் கடி கொண்டது
இந்த வனுட லுந்தின தில்லை யால அந்தவன்
கடி கொண்டது மில்லையே
வலவன் விரத் தாதன் வலத்திடை
வந்தே நின்று பலவிடங் கொண்டார்
……… முன் பகர்ந்திடில் வை எருர்
சித்தன் மெல்லவே மீண்டானேங்க மிகுத்திடம்
………… சொல்லியே வலத்து நிர்கில்
துஞ்சினாரெனபாய் மாவே

**விளக்கம் :**

மேற்குறிப்பிட்டு இருக்கும் அஞ்சனம் மருந்து என்றால் இந்த வகை சிகிச்சை கூடுமான வரை மிகக் கருமை

கட்டத்தில்தான் பயன்படுத்திக் கொண்டு இருக்கிறார்கள் அதன்படி அனைத்து விஷ சந்துக்கள் கடித்தால் அதன் நிவர்த்திக்கு அஞ்சன மருந்தைக் கீழே மிக விளக்கமாகக் கொடுக்கப்பட்டு உள்ளது.

1) சுத்தம் செய்த நீர்வாளம் பருப்பு 2) நீலி (அவுரி) 3) துய்ய மடையன் 4) திரிகடுகு 5) பூண்டு இவைகளை சமன் அளவு எடுத்துக் கொண்டு இந்த மருந்துகளை சமன் எடை எடுத்துக் கொண்டு கல்வத்தில் போட்டு நீலிச்சாற்றை விட்டு அரைத்து உருண்டை செய்து நிழலில் காய வைத்துக் கொள்ளவும். இந்த மருந்தை வெற்றிலைச் சாறு, அல்லது வெந்நீர் விட்டு உரைத்து விஷம் கடித்தவன் கண் விழிகளில் 5 சொட்டு வீதம் போடவும். இப்படிப் போட்டால் சற்று நேரத்திற்கு எல்லாம் அசையாத உடல் சற்று அசையும், கண்கள் திறக்க முடியாத நிலையில் இருந்த கண்கள் திறக்கும் மூச்சு தடைபட்டு இருந்தாலும் சரியாகும், பத்தியம் பச்சரிசி கஞ்சி கொடுக்கவும்.

அக்காலத்தில் அதிகமாக இந்தமுறைகளைத்தான் அதிகம் பயன்படுத்திக் கொண்டு சாகும் நிலையில் இருந்தாலும் இந்த அஞ்சன மருந்தைக் கண்களில் போட முடியாத நிலை ஏற்பட்டாலும் விஷம் கடித்து ஜீவன்கள் மட்டும் துடித்துக் கொண்டு இருக்கும் சமயத்தில் இந்த அஞ்சன மருந்தை விஷம் கடித்தவன் தலையில் கத்தி கொண்டு கீறி அதன் மேல் இந்த அஞ்சன மருந்தை வைத்து சற்று அனல் சட்டியை மேல் வைத்தால் சீக்கிரம் இரத்தத்தில் கலந்து விஷத்தை முறிவு செய்யும் இப்படி எல்லாம் அக்காலத்தில் செய்து வெற்றி அடைந்தும் பல நோயாளிகளைக் குணப் படுத்தி இருக்கிறார்கள் என்பதைப் பழைய சுவடிகளின் மூலமாக நாம் பார்த்துப் புரிந்து கொள்ள எழுதி வைத்து இருக்கிறார்கள். அந்தச் சுவடியின் ஒரு பகுதிதான் இந்த மருந்து முறை அஞ்சனம் மருந்தாகும்.

## அஞ்சனம் மருந்து, (கண்களில் போடும் கலிங்கம்)

சுவடி மருந்து முறை : 3

விஷ மிரக்க கடியா ........ கிலி நாவே
நன்னில் கடித்திருகில் யெகுதுறின் காரத்தை
இடியாது உகாரம் உச்சியாலாகும்
இதமான ........ நெஞ்சிலது
துடியாது ஆமறின் சிலி வாவா
சொல்விடுக்கில் விடமே (உ)
அரவங் கலந்து உயிரெதுங்கி அழுத்த
தடங்கி தீரும்
பரமல் இரவல் பிணங்கள் கொடு வந்ததால்
எழுது கலிங்கம் இயம்பங்கேளு
காவாய் வசம்பு துருசு கேந்தி கடுகு
சன்னிவாள் மயின் வா யிரம்ப
பெருங்காயம், திப்பிலி, மிளகு சுக்குடனே
உடனே மடையன் வெடி உப்பு
உளுவையுள்ளி யிந்துப்புகூடனே தாரங்
குன்ரி வினரகயந்த கொல்லி விரை
யுமுக்கு நடனே பச்சைப்பாம்பு சுந்த

நெங்கை கெருடனக் கோடிலேரும்
மதிடனே பாக்கம் குளவிரை சிரந்த
யொடிப்பலஞ் சேரே (க)
சேரும் வகைக் களஞ்சிரண்டு தில்லைக்
கழுதை பாலுளக்கு
பாரும் பங்க மேனியினை பகாராப் அரிச்
சாறுடனே வருவக் கைச்சாறு
அமுக்கு வழு வரைத்துக் குளம்பானால்

தரும் குளிகை உளுத்தளவும்
திரட்டி வெய்யில் தானாலரத்தே (உ)
உலந்து வெய்யில் நாள்மன்று உடனே
யெடுத்து செம்பில் வைத்து
குளர்த்து அரவங் கடி கொண்டு குறுவி
யாவி கொண்டு வந்தால்
பிலத்து நிம்பச் சாற்றிலுண்டை பேணி
யரைந்து கண்ணிலிட
நிலத்தே லோரும் நீர்ப்பாயும் நிசமே (ங)
மீளும் கண்டிரே
துள்ளன வான னீலனுடன் துய்ய மடை
யன் திரிகடுகு வெள்ளை
யுள்ளி யாவை யெட்டும் விரவே எலுமிச்சம்
சாற்றில் உள்ள படியே அரைதுண்டை
உரைத்து நயனந் தனிலே முத அள்ளி
விஷ முண்டான ருளால்
அசந்து கடியு மிண்டிடுமே
யிந்த மருந்து சரியிடைக் கூட்டிக்
கொண்டு வெற்றிலைச் சாற்றில்
அரைத்து கண்ணி லேமுத கேல விஷமுந்
தீரும் கை கண்டது

விளக்கம்:

இதில் குறிப்பிட்டு இருக்கும் அஞ்சனம் மருந்து உலகிலே மிக உயர்ந்த மருந்தாகும். காரணம் அவ்வளவு சக்தியும் விஷகடிக்கு மிகச் சிறந்ததாகும் என்பதை இக்காலத்து மக்களுக்கு அக்காலத்துச் சித்தர்கள் எழுதி வைத்து இருக்கிறார்கள். அதனைப் பற்றிக் கீழே கொடுக்கப்பட்டு உள்ளது.

## தேவையான மருந்துகளின் விபரம் :

1. லிங்கம் 2. வசம்பு 3. துரிசு 4. சுந்தகம் 5. கடுகு 6. சன்னி 7. வால், 8. மயிர் 9. வாயிரம் 10. பெருங் காயம் 11. திப்பிலி 12. மிளகு 13. சுக்கு 14. மடையன் 15 வெடி உப்பு 16. வெங்காயம் 17. இந்தும்பு 18. காரங்குன்றிவிரை 19. கொல்லிவிரை, 20. பெரியா நங்கை 21. கெருடன் கிழங்கு 22. கொடி வேலி இவை களை அனைத்தும் வகைக்கு 100 கிராம் எடைக்கு எடுத்துக் கொண்டுதில்லை கழுதைப் பால் குப்பைமேலி சாறு இவைகளை விட்டு தனித்தனியாக அரைத்து கடைசி யாக அமுகிராக் கிழங்கு சாற்றில் 3 மணி நேரம் அரைத்து உளுந்து அளவிற்கு மாத்திரை செய்து வெயிலில் மூன்று நாட்கள் வைத்து எடுத்துக் கொண்டு பத்திரமாக வைத்துக் கொள்ளவும். விஷம் கடித்தவர்களுக்கு இந்த மாத்திரையை விஷத்துக்கு ஏற்றவாறு எலுமிச்சப்பழம் சாற்றில் அல்லது வேப்ப இலைச் சாற்றில் அல்லது வெற்றிலைச்சாற்றில் இவைகளுடன் உரைத்து 5 சொட்டு வீதம் கண் விழி களில் போட்டால் சகல விஷமும் தீரும்.

பத்தியம்:

விஷம் இறங்கும் வரை அரிசி கஞ்சி கொடுக்கவும்.

## சயத்துக்கு நெயி வகை மருந்து

### சுவடி மருந்து முறை : 4

நறு நெய் நாழி ... எ ... ஆவாரைங்
பஞ்சகம் இடித்து வைத்துக் கொண்டு
அதில் நெய் படி - இ - விட்டு பால்
படிகம் யிளநீர் கள் தூரந்து அதில்
ஆவரை பித்து யுளக்கு விட்டு மூடி
வைக்கவும் மூன்ணு நாளெடுத்து

அரைத்து அந்த யிளநீச் தண்ணீயும்
விட்டு நெய்யில் சேர்த்துக் காஞ்சில்
பதத்தில் வடித்து (மு)
நான் எழுது பொது கொடுக்கவும்
சுபச தொன்னூ த்தாறும் தீரும்
பத்தியம் உப்பும் புளித் தவிர்க்கவும்
அன்னப் பாலுஞ் சாதமும் சாப்பிடவும்
குருவே துணை

விளக்கம் :

க்ஷய ரோகம் என்ற நோய்க்கு இவ்வுலகில் கணக்கில் அடங்காத அளவிற்கு மருந்துகளைப்பற்றி பல நூல்களில் வெளி வந்துள்ளன. இப்படி இருக்க அக்காலத்துச் சித்தர்கள் அவர்கள் அனுபவித்த சில முறைகளைப் பற்றி இச்சுவடியில் எழுதப் பட்டிருப்பதைக் கீழே விளக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

## தேவையான மருந்துகள் விபரம்

1. நெய் ½ லிட்டர்
2. பசும்பால் 1 லிட்டர்
3. இளநீர் 1 லிட்டர்
4. ஆவாரை சமூலச் சூரணம் 150 கிராம்

இவை அனைத்தையும் ஒரு பாத்திரத்தில் போட்டு கலக்கி மேல் மூடி போட்டு இப்படி மூன்று நாட்கள் வைத்திருந்து நான்காம் நாள் மேல் மூடியை எடுத்து பாத்திரத்திலிருக்கும் தெளிவான நெய் கலந்த நீரையும் மட்டும் இறுத்து இதனை அடுப்பில் வைத்துக் காய்ச்சி எண்ணெய்ப் பதம் வந்தவுடன் இறக்கி வடிகட்டி வைத்துக் கொள்ளவும்.

அளவு :

ஒரு நாளைக்கு ஒரு வேளைக்கு ஒரு காசு எடை வீதம்

காலம்:

ஏழு நாட்களுக்கு மட்டும் சாப்பிடவும்

பத்தியம் :

உப்பு, புளி. நீக்கவும், பால் சாதம் சாப்பிடவும்

## சகல கணைக்கு மருந்து

சுவடி மருந்து முறை 6

ஆமணக் கெண்ணை படி - இ - குமரி வேர்பலம் - சு -
இலவங்கப்பட்டை – க - பிடங்க நாமுரிப் பட்டை - க
மதுரம் பலம் - உ - கடுக்காய் பலம் - க - மாயக்காய்
பலம் - க -
அமுகக்கு பலம் - க - ஆகயில் வளவும் மூள்ளு
முருங்க லைச்சாறு
விட்டு அரைத்து யீருள்ளிச் சாறுபடி - க கூடி
முருங்கலைச்சாறு
படிகால் - க - கூட விட்டு எண்ணையும் விட்டு
பதத்தில் காச்சி -
காசிடை கொடுக்கலு களையுந்த தீரும். குருவே
துணை

விளக்கம் :

கணை என்பதில் பதினெட்டு வகை உண்டு. மாந்த நோய் குழந்தைகளுக்கு வரும், இந்த நோய் முற்றி விட்டால் இந்தக் கணை ஏற்படுகிறது.

### தேவையான மருந்துகளின் விபரம் :

1. ஆமணக்கு எண்ணை ½ லிட்டர்
2. குமரிவேர் (சேர்த்து 35 கிராம் காய்ந்தது கத்தாழை)

3. இலவங்கப்பட்டை 35 கிராம்
4. அதிமதுரம் ,,
5. கடுக்காய் ,,
6. மாசிக்காய் ,,
7. அமுக்கராக் கிழங்கு ,,
8. நெருஞ்சிமுள் ளு ,,
9. நாமுரிப்பட்டை ,,
10. முருங்கஇலைச்சாறு 100 மில்லி
11. வெங்காயச் சாறு 100 மில்லி

மேல் குறிக்கப்பட்டு இருக்கும் மருந்துவகைகளை

இவைகளை முள் ளு முருங்கிஇலைச்சாற்றில் விட்டு அரைத்து இத்துடன் வெங்காயச்சாறு, முருங்கயிலைச்சாறு வகைக்கு ½ லிட்டர் சேர்த்துக் கொண்டு இதில், 200 மில்லி விளக்கெண்ணையையும் சேர்த்து ஒரு பாத்திரத்தில் ஊற்றி அடுப்பில் வைத்து எண்ணை பதம் வரும்வரை காய்ச்சி வடித்து வைத்துக் கொள்ளவும்.

அளவு:

ஒரு நாளைக்கு ஒரு வேளை ஒரு காசு எடை வீதம்

தீரும் வியாதிகள்:-

அனைத்து விதமான கணைவியாதிகள் போகும்

காலம்:

பத்து நாட்களுக்குச் சாப்பிடவும்

பத்தியம் :

இச்சாபத்தியம் மாதிரி இருக்க வேண்டும்.

# வாயிவுக்குத் தைலம் மருந்தும்

சுவடி மருந்துமுறை : 7

வாயுவு பத்துக்கு பெரும் பாண்டும் மகோதரம் யுதர
தோஷம்
காருண்த வாய்வுக்கும் தயிலம் கெந்தகம் பலம்?
பொரிகாரம் பலமரு ¾
வாலம் பலம் ஞ - யிந்துப்புப்பலம்-ரு ஆகப் பலமரு
வ சந்தாளம்
பூச்சாறு விண்டு அரைத்துப் பீங்கானில் வைத்து
மேலப் பீங்கானில்
மூடி றவியல் வைக்கத் தயில மாம் யெடுத்துக் காசிடை
கொடுக்கவும் கை கண்ட வித்தை. குமரன் துணை

விளக்கம் :

மனிதன் உடலில் வாய்வு என்பது இல்லாதவர்கள் இல்லை அப்படிப்பட்ட வாய்வு, அதிகமயாகி உடம்பில் சில சமயங்களில் ஓர் இடத்தில் தங்கிக் கொள்வதின் காரண மாக வலி, வீக்கம், இவைகள் வருவதுடன் கை அசைவு கழுத்து அசைவு, கால் அசைவு, இடுப்பு அசைவு, இவை களில் வந்து வாய்வு இறங்கிக் கொண்டு சில சமயம் அசை யும் போதும் நீட்டும் போதும் வலி ஏற்படும் இதனைத் தான் நாம் வாய்வு என்று சொல்வதுண்டு இந்த வாய்வு பத்து விதப் உண்டு அதன் நிவர்த்தி கீழே மருந்து வகை களைப் பற்றியும் செய்யும் முறைகளைப்பற்றியும் கொடுக் கப்பட்டு உள்ளன. இதன் காரணமாகப் பலவித மான

நோய்கள் வருகின்றன. இந்த மருந்துகளைக் கூட பெரும் பாண்டும், மகோதரம், உதர தோஷம் இந்த நோய்களுக்குக் கொடுத்தாலும் நிவர்த்தியாகும்

**தேவையான மருந்துகளின் விபரம் :**

1. கந்தகம் ... 35 கிராம் எடை
2. பொரிக்காரம் ... ,,
3. சுத்தி செய் நீர்வாளம் ... ,,
4. இந்துப்பு ... ,,

இவைகள் அனைத்தையும் கல்வத்தில் போட்டுக் கத்தாள பூ சாற்றை விட்டு 3 மணி நேரம் அரைத்து ஒரு பீங்கான் பாத்திரத்தில் வைத்து மேல் மூடி போட்டு வெயிலில் வைத்தால் தயிலம் மாதிரி இறங்கும். இதனை வடி கட்டிக் கொண்டு கீழ்க் குறிப்பிட்ட அளவு அனுபானத்தில் கொடுக்கவும்.

அளவு:

ஒரு நாளைக்கு ஒரு வேளை ஒரு காசு எடை

**காலம் :**

ஏழு நாட்கள் சாப்பிடவும்

**பத்தியம் :**

வாய்வு உணவு வகைகளை நீக்கவும்

**அனுபானம்:**

பொரி மாவில் மேற்படி தயிலம் மருந்தைக் கலந்து உட்கொள்ளவும்.

# முலைப்பால் கட்டு சுரம் நிவர்த்திக்கு மருந்து

சுவடி மருந்து முறை : 8

முல்லைப் பாலில்லாத பேருக்கு பாலுண்டாக்க
கொடுக்கும்
மருந்து சிறு பிள்ளையடிடையை யிடித்து பிழிந்து
மேல்பட்ட
சாறுபடி - வ பால்படிவ கூட்டிக் கொடுக்கவும்
பாலுண்டாம்
ஆறுமுகந்துணை

விளக்கம் :

குழந்தைக்குத் தாய்ப் பால் கொடுக்கும் தாய்மார்களுக்குச் சிலகாரணத்தால் பால் சுரப்பது இல்லை. அதாவது உட்கொள்ளும் உணவு வகைகள் குறைவு. அதன்படி உட்கொள்ளும் உணவில் சத்துவகைகள் இல்லாத உணவு உடம்பில் நல்ல ஆரோக்கியம் இல்லாத காரணத்தால் பால் சுரக்கும் சில உறுப்புகள் சரிவரவேலை செய்யாத காரணத்தாலும் பால் சுரப்பது குறைந்துவிடுகிறது. இதனை நிவர்த்தி செய்ய அக்காலத்திலும் இக்காலத்திலும் பலவித மான மருந்துகளும் பால் உணவு வகைகளும் வந்து இருக்கின்றன. ஆனால்

அக்காலத்துச் சித்தர்கள் இப்படிப்பட்ட தாய் மார்களுக்கு அதிகமான பால் சுரக்க வேண்டும் என்று அவர்கள் அனுபவத்தில் உள்ள மருந்துகளை இச்சுவடியில் எழுதி வைத்து இருப்பதின் கருத்தைக் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

சிறு பிள்ளைச் செடியை நன்றாக இடித்துச் சாறு $\frac{1}{4}$ லிட்டர் அளவுடன் பசுவின் பால் $\frac{1}{4}$ லிட்டர் அளவையும் சேர்த்துக் கொடுத்தால் பால் அதிகமாகச் சுரக்கும் இது சித்தர்கள் கை கண்ட அனுபவ மருந்து

# அஸ்த்திசுரம் நாலுமுறைச் சுரத்துக்கு மருந்து

சுவடி மருந்து முறை 9

அரிதாரம் - பல - மய - சுண்ணாம்புக் கல்லுக்கும்
பச்சை தண்ணீர் விட்டு மூன்று திரம் சுத்தி பண்ணிக்
கொண்டு மிளகு பலம் - ரு - சித்தரத்தை பல
ங - இ - ஆயிவளவும் முலைப்பால் விட்டு அரைத்து
யிஞ்சிச் சாறு
மிளகு கிஷாயம் முலைப்பால் யிதில் கொடுக்கவும்
நல்ல விசன் குளிகை, குமரன் துணை

## தேவையான மருந்துகளின் விபரம்

**விளக்கம்:**

| | | |
|---|---|---|
| 1. சுத்தி செய்த அரிதாரம் (தாளகம்) | ... | 14 கிராம் |
| மிளகு | ... | 20 ,, |
| சித்தரத்தை | ... | 20 ,, |
| சுண்ணாம்புக் கல் | ... | 15 ,, |

மேற்சொன்ன மருந்துப் பொருள்களைக் குறிப்பிட்ட அளவுப்படி எடுத்து முலைப்பால் விட்டு 3 மணி நேரம் அரைத்துச் சிறு உருண்டையாகச் செய்து நிழலில் காய வைத்துக் கொள்ளவும்,

**அளவு:**

வயதுக்குத் தகுந்தாற்போல கொடுக்கவும். இந்த மருந்தினைச் சுரம் நிற்கும் வரை கொடுக்கவும்

**அனுபானம்:**

இந்த மாத்திரையுடன் இஞ்சிச்சாறு மிளகு கிஷாயம் அல்லது முலைப்பாலில் கலந்து கொடுக்கவும்.

# சுரகுளிகை, (குற்றால நாதா வகைப் பொடி மருந்து)

சுவடிக் குறிப்பு: 10

மிளகு சுக்கு திப்பிலி மஞ்சள் கடுகு வெள்ளுள்ளி கருஞ்சீரகம் காயம் வசம்பு முருங்கைப்பட்டை

ஆக வகைக்குந்த கொளுந்தி வேர் - பலம் - வ சாரணை வேர்
பலம் - ங பசுவின் கோமியம் படி ளு ஆகயிவ்வ ளவும்
புதுச்சட்டியில் விட்டு யிந்த நீர் யிரண்டு சேர்த்து மருந்துச்
சட்டில்ப் போட்டு நிலவாகை மேலேப் போட்டு
வெயிலில் காயவைத்து நன்றாயுலத்தின் பின்யுரலில் போட்டு யிடித்து
வடிகட்டி வைத்துக் கொண்டு வாய்வு பித்த வாய்வு சூலை வாய்வு
உதரதோஷம் பெறுவயிறு வீக்கம் மகோதரம் பிலிகைச் சோகை
கவுசி குன்மம் பெரு வியாதி

விஷபாகம் யிவளவுக்கும் வென்னீரிகுக் கொடுக்கவும் உப்பும் புளி புகயுலை யாகாது முருங்கைப் பிஞ்சு கிரை யுங் கட்டிக் கொள்ளவும் குருவந்தாது துலண

விளக்கம் :

| | | | |
|---|---|---|---|
| 1. | மிளகு | ... | 35 கிராம் |
| 2. | சுக்கு | ... | ,, |
| 3. | திப்பலி | ... | ,, |
| 4. | மஞ்சள் | ... | ,, |
| 5. | கடுகு | ... | ,, |
| 6. | பூண்டு | ... | ,, |
| 7. | கருஞ்சீரகம் | ... | ,, |
| 8. | பெருங்காயம் | ... | ,, |

9. வசம்பு 35 கிராம்
10. முருங்கைப்பட்டை ,,
11. கொஞ்ச வேர் ,,
12. சாரணைவேர் ,,
13. சூரத்து நிலாவரை தூள் 200 கிராம்
14. பசுவின் கோமியம் ½ லிட்டர் (500 மில்லி)

மேற் சொன்ன மருந்து வகைகளைக் கல் உரலில் போட்டு இடித்துப் பொடி செய்து கொண்டு, ஒரு புதுச் சட்டியில் பசுவின் கோமியத்தை ஊற்றிய பின் மேலே இடித்து வைத்திருக்கும் மருந்துத் தூளை இதில் போட்டுக் கலந்து வெயிலில் வைத்துக் காயவைக்க வேண்டும். நன்கு காய்ந்தவுடன் திரும்பவும் உரலில் போட்டு இடித்துத் தூள் செய்து துணி கொண்டு வடிகட்டி வைத்துக் கொள்ளவும்.

அளவு:

மூன்று கிராம் எடை வீதம் எடுத்து தினம் ஒரு வேளை சாப்பிடவும்

காலம்;

24 நாட்கள் (அரை மண்டலம்) சாப்பிடவும்.

பத்தியம் :

உப்பு, புளி, புகையிலை நீக்கவும். முருங்கப்பிஞ்சை சேர்த்துக் கொள்ளவும்

அனுபானம்:

வெந்நீரில் கலந்து கொடுக்கவும்

தீரும் வியாதிகள் :

பித்தவாய்வு, வாய்வுசூலை, வாய்வு தோஷம், பெரு வயிறு வீக்கம்

# இருமல் அக்கி இவைகளுக்கு மருந்து

சுவடி மருந்து முறை : 11

முருங்கையிலையும் யீருள்ளியும் யிடித்துப் பிளிந்து அரைக்கால் படி கொடுக்கவும் யீளை யிருமல்த் தீரும் குமாகுரு பரன் துணை. வெள்ளாட்டுக் கோமிய மூன்று நாள் கோக்க வாளைவு சூலை தீரும் தலையிடிக்கி மருந்து பொருந்துப்பை சிறுநீர் விட்டு கசக்கி யெரளந் தீரும்-மூன்று திரம் யெற்றவும் அரையாப்புக்கு அரைய யரைப்புகுக் காலில் கட்ட காயம் வைத்து கால்மாரி பெரு விரலில்க் கட்டவும். அரையாப்பில் வெள்ளுள்ளி அரைதப் போடவும் தரும் தொன்னூறு நாளிகை யிருந்ததால் அவிழ்த் துப் போடவும். - நல்ல மிளகு பலம்- க - இந்த மூணு மருந்தும் இஞ்சிச்சாறு மிளகுக் கசாயமும்மா கும்- நாளைப் போவான் குளிகை வெள்ளிப்பாஷாணம் களஞ்சி - உ -திருகு கள்ளிப்பால் படி - உ - சட்டியில் விட்டு சாசாணக் கட்டியை பாலிலே போட்டு மஞ்சட்டி கொண்டு மூடி தீயெரிக்கப்பால் கருகினாலு காசாணத்தை யெடுத்துக் கொம்பன் மாலைச் சாறு விட்டு அரைத்து சிறு பயறு அளவுக் குகை சேர்த்து ஒலத்தி வைத்துக் கொண்டு முலைப் பாலில் பொழுது மூன்று குரிகை கொடுக்கவும்.

விளக்கம்:

முருங்கைஇலை - ஒரு கைப்பிடி அளவு வெங்காயம் ஒரு கைப்பிடி அளவுக்கு இவை இரண்டையும் எடுத்து இடித்துச் சாறு எடுத்து உட்கொண்டால் ஈளை இருமல் தீரும்.

வெள்ளாட்டுக் கோமியத்தை 25 மில்லி வீதம் எடுத்து மூன்று நாள் உட்கொண்டால் வாய்வு, சூலை நீங்கும்.

பெருந்தும்பை இலையைக் கொஞ்சம் எடுத்துச் சிறு நீர் விட்டுக் கசக்கி மூக்கில் பத்துச் சொட்டு வீதம் உறிஞ்சினால் தலையிடி நீங்கும்.

வெள்ளைப்பூண்டை 25 கிராம் எடைக்கு எடுத்து அரைத்து அரையாப்புக் கட்டிக்கு மேல் தடவினால் அரையாப்பு என்ற நோய் தீரும் (அரைத்த பூண்டை அரையாப்புக் கட்டிக்கு மேல் தடவி தொண்ணூறு நிமிடம் கழித்து அலம்பி விடவும்)

1. நல்ல மிளகு, 1. வேப்பம் பருப்பு, 3. வெள்ளைப் பாஷாணம் இவை மூன்றையும் சமன் எடை எடுத்து இஞ்சிச்சாறு விட்டரைத்து சிறு பயறு 130 மில்லி கிராம் எடை அளவுக்கு உருண்டை செய்து நிழலில் காயவைத்துக் கொடுக்கவும்.

அளவு :

130 மில்லி கிராம் எடை வீதம் ஒரு நாளைக்கு ஒரு வேளை

காலம் :

ஆறு நாட்கள் மட்டும்

பத்தியம் :

கஞ்சி உணவு கொடுக்கவும்

அனுபானம்

இஞ்சிச்சாறு, மிளகு கஷாயம்

தீரும் வியாதி :

சகலசுரம் வகையும் தீரும்

அரையாப்புக்கட்டி நிவர்த்தியாகும்

5 கிராம் வெள்ளை பாஷாணக்கட்டியை ஒரு புதுச் சட்டியில் போட்டு இதில் ஒரு லிட்டர் திருகு கள்ளிப் பாலை ஊற்றி இதற்கு மேல் மூடி போட்டுத் தீ எரிக்கவும். எரித்து பால் வற்றியவுடன் பாஷாணக் கட்டியை எடுத்துக் கொம்பன் இலைச்சாறு விட்டு அரைத்துச் சிறு பயறு அளவுக்கு மாத்திரை செய்து கொள்ளவும்.

அளவு:

தினம் மூன்று வேளை கொள்ளவும்.

காலம் :

மூன்று தினங்கள் மட்டும்.

பத்தியம் :

கஞ்சிச் சாதம்

**அனுபானம்:**

முலைப்பாலில் கலந்து கொடுக்கவும்.

**தீரும் வியாதிகள்:**

சகல சுரம், அத்தி இவைகள் தீரும்

## அஷ்திசுரம், பிரமேகம், வாயிவு, சேரியாமை, சகல உஷ்ணம் இவைகளின் நிவர்த்திக்கு மருந்து

சுவடி மருந்து முறை **12**

இஞ்சி பலம் - ய சீரகம் பலம் - உ கூகைநீர் பலம் - உ
சுக்கு, மிளகு, திப்பிலி
கடுக்காய் நெல்லிகாய் தானிக்காய் ......
சாதிக்காய் ........ சாபபத்திரி கிறாம்பு, வால் மிளகு
தாளிச பத்திரி
குருசாணி ...... வாய் விளங்கம் ...... ஆக வகை - க -
பலம் - ச நெய்
படி வீசம் சீனி பலம் ........ நு ஆக மருந்து யிவள்வும்
பண்ணி
பஞ்ச தாரையில் திண்ண அஷ்திசுரம் மேகம் பிர
மேகம் - வாய்வு செரி
யாண்மை சகல எருகமுற் தீரும் குருவே துணை

விளக்கம் :

| | | |
|---|---|---|
| 1. | தோல் சீவிய இஞ்சிச்சாறு | 200 மில்லி |
| 2. | நற்சீரகம் | 70 கிராம் எடை |
| 3. | கூகைநீர் | ,, |
| 4. | சுக்கு | ,, |
| 5. | மிளகு | ,, |
| 6. | திப்பிலி | ,, |
| 7. | கடுக்காய் தோல் | 35 கிராம் எடை |
| 8. | தான்றிக்காய் தோல் | ,, |
| 9. | நெல்லிக்காய் வற்றல் | ,, |
| 10. | சாதிக்காய் | ,, |
| 11. | ஜாதிபத்திரி | ,, |
| 12. | கிராம்பு | ,, |
| 13. | வால்மிளகு | ,, |
| 14. | தாளிசபத்திரி | ,, |
| 15. | குருசாணி ஓமம் | ,, |
| 16. | வாய்விளங்கம் | ,, |
| 17. | நெய் | 25 கிராம் |
| 18. | சீனி | 200 கிராம் |

மேற் சொன்ன மருந்து வகைகளைக் குறிப்பிட்ட அளவுப்படி எடுத்துச் சுத்தம் செய்து கல் உரலில் போட்டு இடித்துத் தூள் செய்து துணி கொண்டு வடிக்கட்டிச் சூரணம் போல் எடுத்துக் கொண்டு, சீனியும், இஞ்சிச் சாற்றையும் ஒன்று சேர்த்து அடுப்பில் வைத்துக் காய்ச்சி பாகு பதம் வரும் வரை காய்ச்சியுடன் இந்தக் சூரணத்தைப் போட்டுக் கிண்டிதார் பதம் வந்தவுடன் இறக்கி நெய்யை ஊற்றி நன்றாகப் பிசைந்து வைத்துக் கொள்ளவும்.

அளவு:

10 கிராம் எடை வீதம் தினம் ஒரு வேளை

காலம் :

1 மண்டலம் (48 நாட்கள்)

பத்தியம் :

வாய்வுப்பண்டம், கரப்பான் உணவு வகைகளை நீக்கவும்.

தீரும் வியாதி:

மேற்குறிப்பிட்ட வியாதிகள் யாவும் தீரும்.

## மேக நோயின் நிவர்த்திக்குக் கிருத மருந்து

சுவடி மருந்து முறை 13

ஈறு நெய் படி - வ - தேன்படி - வ இருள்ளிச்சாறு படி
வ பஞ் ச
படி - வ - கோழி முட்டை வெள்ளைக்கருபடி - வ
ஆக யிவ்வளவுண்
ஒன்றாக்கி முன்றுந் ...... பிடம் வைத்து கரண்டி விதங்
கொள்ள
மேக அய தீரும் பத்தியம் உப்பு காணு - யிந்த
வித்தை ஒருத்
தருக்கும் சொல்லப்பிடாது

## தேவையான மருந்துகளின் விபரம்

விளக்கம் :

1. பசுவின் நெய் ... 100 மில்லி
2. தேன் ... 50 மில்லி
3. வெங்காயச்சாறு ... 500 மில்லி
4. கோழிமுட்டையின் வெள்ளை 200 மில்லி
   கருவு மட்டும்
5. எலுமிச்சம்பழச்சாறு 50 மில்லி

இவைகளை வகைப்படி எடுத்துக் கொண்டு நன்றாகக் கலக்கிச் சூடு காண்பித்துச் சாப்பிடவும்.

அளவு :

தினம் ஒரு வேளை வீதம் ஒரு தேக்கரண்டி அளவுக்குச் சாப்பிடவும்

பத்தியம் :

புளியை நீக்கவும்

தீரும் வியாதிகள் :

அனைத்து மேக நோய்கள் தீரும்

## பிளிச நோயின் நிவர்த்திக்கு மருந்து

சுவடி மருந்து முறை 14

நத்தச் சூரி வேர் - பாலுக் ........ க ........
அளிஞ்சி வேர்ப்பட்டை பலம் ...... கொண்ரைக்
கொழுந்து பலம் - க - யிதுகளை பெருங் கொம்
மட்டிக்காய்ச் சாறு விட்டு அரைத்து முக்கால் படி
நல்லெண்ணையில் பொடித்துப் போட்டு பேத்ததிலை
வடித்து முழு - மேகம் ...... உய ... நயன பெருகம்
பீறுசம் யிவைத் தீரும். குமரன் துணை

## தேவையான மருந்துகளின் விபரம்:

விளக்கம் :

| | | |
|---|---|---|
| நத்தச் சூரிவேர் | ... | 70 கிராம் எடை |
| பாலு குருட்டி வேர் | ... | ,, |
| அளஞ்சி வேர் | ... | ,, |
| கொன்னமரத்து இலைக் கொழுந்து | ... | ,, |
| கொமட்டி காய் | | 100 மில்லி |
| நல்ல எண்ணெய் | | ¼ லிட்டர் |

இவைகளை வகைப்படி எடுத்துக் கொண்டு பெரிய பொ முட்டிக்காய்ச் சாற்றில் அரைத்து 250 மில்லி நல்லெண் ணெயில் இவைகளை எல்லாம் ஒரு பெரிய பாத்திரத்தில் ஊற்றி அடுப்பில் வைத்து எண்ணெய் பதம் வரும் வரை காய்ச்சி வடித்து வைத்துக் கொண்டு வாரத்திற்கு நான்கு முறை தலை தேய்த்துக் குளித்து வந்தால் பீனிசம் நிவர்த்தி யாகும்.

## சகல விஷத்துக்கும் மிளகு மருந்து

சுவடி மருந்து முறை 15

நல்ல மிளகு கலம் உ திருகுக்கள்ளிப்பால் படி - வ
விரவி நிழலுலத்தாயி உலத்திக் கொண்டு எல்லா
விஷத்துக்கும் பத்து மிளகு சிறு நீரில் அரைத்து
கொடுக்கவும் சகல விஷபிம் தீரும் குருவே துணை.

விளக்கம் :

சில விஷக்கடி, சில விஷப்பூச்சிகள், பூரான் இவைகள் கடித்தால் நிவர்த்திக்கு மருந்து

மிளகு, 70 கிராம் எடை, திருகுக்கள்ளிப்பால் 200 மில்லி இதனை இரண்டையும் நன்றாகக் கலந்து நிழலில் காயவைத்துக் கொண்டு சிறு விஷக்கடிகளுக்குப் பத்து மிளகு அளவு எடுத்து விஷம் கடித்தவர்களின் சிறுநீர் விட்டு அரைத்துத் தினம் இரண்டு வேளை வீதம் விஷத் திற்குத் தகுந்தால் போல் கொடுக்கவும்.

பத்தியம் :

உப்பு, புளி எண்ணெய் வகைகளை நீக்கவும்.

# திருகு தைலம்

சுவடி மருந்து முறை : 16

யிரதம், மனோசீலை, அரிதாரம், கெந்தகம், நமச்சாரம்
லிங்கம், யிந்துஉப்பு, கருஞ்சீரகம் நாட்டு சன்னி
நாயகம்
ஆரியக் கரை சன்னிநாயகம் பச்சை நாவி வெள்ளுள்ளி
செம்பு, ஆக வகைக்கு க ஞ்சி விதங் கூட்டிப்
பொடித்து சீலை
யிலூ டித்திரி யாக்கிப் பதனம் பண்ணிக் கொள்ளவும்
வேப்பெண்ணை
விட்டுத் திரி கொக்க எறுக்கி எண்ணையில் முக்கி
விளக்கிலே
கொழுந்தி தயிலம் வடிக்க அத்தயிலம் பீங்கானில்
வைத்துக்
கொண்டு சன்னி வலிரு தோஷம் சூலையசு-வாதம்
அய்த்துக்கும் யீஞ்சிக்சாற்றில் கொடுக்கவும் அனுப்
பானம், கண்டு
கொடுக்கவும், யிந்ததயிலம் கைகண்ட வித்தை குரு
மரியக் கூடாது

விளக்கம் :

இந்தப் பாடலில் இந்த மருந்தின் விளக்கத்தையும் மருந்தின் செய்யும் முறை பற்றி யாவருக்கும் தெரியக் கூடாது என்று அக்காலத்துச் சித்தர்கள் சுவடி மூலமாக எழுதி வைத்து உள்ளார்கள் ஆனால் ஏன் அக்காலத்தில் இந்த மாதிரி ரகசியமாக வைத்து இருந்தார்கள் என்று பார்க்கும் போது மிகக் கடுமையான விஷம் யாவரும் செய்ய முடியாத அளவில் இருக்கும் மருத்துவமுறை, மற்றவர்கள் சரியாகப் புரியாது மருந்துகளை உபயோகிக் கும் முறைகள் தெரியாது அவசரப்பட்டு மருந்துகளைத்

தயார் செய்து நோயாளிகளுக்குக் கொடுத்து ஏதாவது உயிர்ச் சேதம் ஏற்பட்டு விடும் அல்லது மருந்துகளினால் வேறு ஏதாவது உடல் பாதித்துவிடும் என்று நினைத்து அக்காலத்துச் சித்தர்கள் மிகவும் விவரமாக எழுதி வைத்து இருந்தாலும் மற்றவர்கள் உடன் புரியாத வாறும், மருத்துவ அறிஞர்கள்தான் இதனைப் புரிந்து செய்ய வேண்டும் என்பதை மிக சூசகமாகவும், ரகசியமாகவும் வேறு ஒரு சொல்லைப்பயன்படுத்தியும் சொல்லிப் பாடல் முறையில் எழுதி வைத்துக் இருக்கிறார்கள். அப்படிப்பட்ட ஒரு பாடலியின் விளக்கத்தைக் கீழே மிக விரிவாகக் கொடுக்கப் பட்டு உள்ளது.

## தேவையான மருந்துகளின் விபரம் :

| | | |
|---|---|---|
| 1. | சுத்தி செய்த ரசம் 20 கிராம் எடை | |
| 2. | மனோசிலை | ,, |
| 3. | அரிதாரம் | ,, |
| 4. | கந்தகம் | ,, |
| 5. | நவச்சாரம் | ,, |
| 5. | லிங்கம் | ,, |
| 7. | கருஞ்சீரகம் | ,, |
| 8. | நாட்டுநன்னாரி | ,, |
| 9. | பச்சை நாவி | ,, |
| 10. | பூண்டு | ,, |
| 11. | வசம்பு | ,, |
| 12. | வேப்ப எண்ணை 250 மில்லி | |

மேற்குறிப்பிட்டிருக்கும் மருந்துகள் விகிதப்படி எடுத்துக் கொண்டு நன்றாக இடித்துத் தூள் செய்துகொண்டு இந்தத் தூளை ஒரு துணியில் பரப்பி இதனைத் திரியாகச் சுருட்டி இந்தத் திரியை வேப்ப எண்ணையில் நனைத்துத் திரியைக் கொளுத்திவிட்டு இந்தத்திரியின் மீது சிறுகச் சிறுக வேப்ப எண்ணையை விட்டு எரியச் செய்யும் போது

இந்தச் சுடரிலிருந்து சொட்டுச் சொட்டாகத் தைலம் இறங்கும். இந்தத் தைலத்தை ஒருபீங்கான் பாத்திரத்தில் விழும்படி செய்து தைலயத்தை சேகரித்துப் பாத்தல் வைத்து மூடிப் பத்திரமாக வைத்துக் கொள்ளவும். இதற்குத்தான் சுடர்த் தயிலம் என்று சொல்வர்கள்.

**உட்கொள்ளும் அளவு :**

ஒரு நாளைக்கு 165 மில்லிகிராம் எடை வீதம் ஒரு வேளை சாப்பிடவும்.

**உட்கொள்ளும் காலம் :**

24 நாட்கள் (அரை மண்டலம்) சாப்பிடவும்

**அனுபானம்:**

இஞ்சிச்சாறு அல்லது வியாதிக்கு ஏற்றபடி அனுபானத்தில் கலந்து கொடுக்கவும்,

**பத்தியம் :**

இச்சாபத்தியம். (புளி, கரப்பான் உணவு வகைகள், வாயு உணவு வகைகளை நீக்கவும்.

**தீரும் வியாதிகள் :**

சூலை பதினெட்டு வகையும், சகலவாதமும், தீரும்.

## நோய்கள் நிவர்த்திக்கும் சுக்கிலம் உண்டாகவும், பசி எடுக்கவும் பித்தம், மூலம், இவை நிவர்த்திக்கு

**சுவடிக் குறிப்பு: 10**

நோய் பெருகக் கண் குளிரும் நீள சுக்கில முண்டாம்
... பசியெடுக்கும் விடு பிந்த மோய் குள்ளே

உளவேக்கை போக்கு முயிரை நிலை நிறுத்துங்
கொல் விருத்தன் பாலனெனக் கொள்
நெல்லிக் காய் தான் குளிர்ச்சி நீள் புளிப்பு
வரதம் போஞ் சொல்லில் துவே வரப்பாகு மெல்லி
யலே சித்தக் கலக்கமுடன் தீரத உட்டணம் போம்
பித்தச் சிலோரமம் போம் பேசு
யென்ன சிலோதும் வாயுவுவளே சிகமேகி விடுஞ்
சொன்னேன் கிருணி சுரதோஷம் சிரணந் தொலைந்து
விடுந்தன்னை சிரவிட மாறு மிளைத்த சரிரவும் ......
மின்னே மிளகின் குணமாது காணும் விரும்பி
னோக்சே

சுக்குக்குத்தாது உண்டாம் ...
சேரனும் போம் சுக்குச் சூலை வலி போம் கண்வலி
போம் மிக்க ...... மதி சாரமநீதம் பொருமல்
வயிறுப்பு சமும் போகுமே மாதே புகல்
மருக்காரை சுக்கு மருதந் தோல் வெள் வேல்
எருக்கா மணக் கடுக்காயெழும் நரிக்கி நாலி
லொன்றுக் காச்சி நாவழித்துக் கொப்பளிக்கப்
பாலன் பல்லாங்கிள் வண் பல கா ரேள்ளுநச்
சுக்குக் கடு கொடு திப்பிலி நேரொக்கக் கூட்டி
நித்தலுமதிம் பிருஹூருக் கொளச் சொல்லி யுண்ட
வன் தன் கிளை போல் வேர்த்துப் போகுமே மூல
வியாதியே வேர் வாதம் போக்கும் மிக்கவிலை
பித்தம் போம் கார் காய் காண் போக்குங்
கபத்தை சினு கசப்புக் கார மணல் விந்தம்
போக்

விளக்கம் :

மேற்கண்ட பாடலில் புரிந்து கொள்ள முடியாத அள
விற்கு மருந்தினைப்பற்றிப் பாடிஉள்ளார்கள். இக்காலத்து

மக்களுக்கு இத்தகைய பாடலைப் பிரித்துச் சுருக்கி விளக்கத்தை கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

சுக்கு, மிளகு, திப்பிலி, வெங்வேல்பட்டை, கடுக்காய் மருக்காரை, எருக்கன், மருதம் பட்டை இவைகளின் குணத்தைப் பற்றிச் சொல்லியுள்ளது. இந்த மருந்து வகைகளை விகிதப் பட எடுத்து இடித்துக் குடிநீர் வைத்து அரைமண்டலம் (24 நாட்கள்) தொடர்ந்து சாப்பிட்டு வந்தால் மேற் சொன்ன வியாதிகளும், நோய்களும் நிவர்த்தியாகும் என்ற கருத்தினை மேலுள்ள பாடலில் குறிக்கப்பட்டுள்ளது.

## சில மருந்து வகைகளைப் பற்றிய குணங்கள் :

**சுவடி மருந்து முறை :**

### கடுக்காயின் குணம் :

கடுக்காயின் தூளை வெந்நீரில் போட்டுக் கொதிக்க வைத்துக் கஷாயத்தை எடுத்து உட்கொண்டு வந்தால் வாத பித்த சிலேத்துமம் தீரும். சுக்கிலம் முண்டாகும். பசி எடுக்கும் நன்றாக மலம் போகும்.

### நெல்லிக்காயின் குணம் :

இதனை இடித்துத்தூள் செய்து கஷாயம் செய்து உட்கொண்டு வந்தால் உடல் குளிர்ச்சி, தீராதஉஷ்ணம், பித்தம், நீர்ப்புளிப்பு, கிராணி, சுரதோஷம், ஜீரணம் இவைகளுக்கு நல்லது.

### மிளகின் குணம் :

மிளகைக் கஷாயம் செய்து உட்கொண்டால் அனைத்து நரம்பு வாய்வுகள், விஷக்கடிகள், தீரும், விஷக்கடிகளுக்கும், பேதி அரிச்சாரம் இவைகளுக்கு நல்லது.

**சுக்கின் குணம் :**

சுக்கை இடித்துக்கருக்கு செய்து உட்கொண்டால் சூலைவலி, வயிற்றுப்பொருமல், மந்தம், வயிறு உப்பிசம் இவைகள் தீரும்.

## உளுந்தை லேகியம் செய்யும் முறையும், உபயோகமும்

**சுவடி மருந்து முறை 18**

*கானை ... சீரகங்கசகசாவும் பூணதி விடைய மோடு*
*சாதிக்காய் கிறாம்பு லோடு தொணலின் ... குளரு*
*சாணி பல*
*மாய்த் தூக்கு பூணவே பொடித்துக் கொண்டு புகழ்*
*பெறு பாகுதணல் பாக தனில் நறு நெய் நாளி*
*பாங்குடன்*
*விட்டுக் கிண்டி வாகினி மெழுகு போல் வாங்கினி*
*வைத்துக் கொண்டு பூகினர்க் கடுப்புச் கெல்லாம்*
*போகட்டிடு*
*வீதம் ளெகி யத்தை வாங்கி னீர்கஞ்சி வீதம் கிருணிகள்*
*போமே அகன்றிடு மோமத் துக்கு மரையிரேல் பல*
*னூறப்பா*
*புகன்றிடு சலந் தான் தூணி கட்டியே யெட்டொன்*
*றக்கி நகன் றிடு*
*சர்க்கரை தான் பலம் பத்து நாட்டிக் கொன்று*
*நிகன்னாடு பாகு*
*செய்து நிச்சயஞ் சொல்லக் கேளே சொல்லக் கேள்*
*முக்கிறா*
*வேர் குந் கிலுஞ் சீனப் பாகும் நல்லக் கேள்துக*
*ளெல்லாம்*

நாட்டது வகை பலன் தாலல்லக் கேள் சூறணத்தையப்
பனே
யதிலிர்ப்பாச்சு வெல்லக் கேள் நறு நெய் யிட்டதிர
கிண்டி வாங்கே
வாங்கியே களஞ்சி வீத மண்டலங் கொள்வதுதில்
வாங்கிய ப்ரங்கி
சூலையுலந்திடு கிரந்தி குட்டந்தாங்கி யாக பாண்டு
வொடு
சார்ந்திடுத் சில விசங்களிங்வையான் வாய்வு மியல்
புடன் யெகு
மேன்றே எகி றொங்காயந்தன்னை யிம்பிஎரு
மின்னங் கேளு பாகுமே
சோமனாதி பலமது விருபத்தஞ்சு லாகுடன் தூவு
நீரில்
மாட்டியே யெட் டொன்றுக்கி யாகுமே சீனிபத்துப்
பலமது வதன்
ரப் போடே
பாச்சியே பாகு செய்து பகர்ந்திடு மருந்து கேளு
வாங்கியே
சுடுத்து மிளகு சுக்கு மாச்சு திப்பிலிமே யோமஞ்
சீரகமதுங்
கொட்டம் பாச்சியே பல ... யாளி நெய் படி கால்
வாரே
காலது வாக வாத்துக் கிண்டியே மெழுகு கொண்டால்
வைத்து
களஞ்சி வீதங் யெல்வே கொள் விருகிலியம்பு வேள் ...
தானே
உண்மையா மருந்து கொள்ளு ... சீரகங்கருதிக்
கொள்ளு தன்மையாங் கறி
... வற்கு வண்மையா முருங்கைப்பிஞ்சு வழுதலை
பிஞ்சு மாமே
பிச்சோடு ... காயுத் துவரம் பிரண்டை சுண்டை

தஞ்சமாஞ்சிறு பயறு தளிர் முளைக் கீரத்தண்டு
நஞ்சு நெத்தலியுந்
தேடு நரகம் நோய் மீன்றானு செக்சுருவுப்புக் கண்டந்
தின்ன நோய்
குணம் தாமே
குணம் தாம் பால் நேய மொருகுனுமயி லுடும்பு
காடை
நினம் தாமரை மை தாரும் கறியும் நினைத்த கோழி
வேணம்
தா மாடு கோழி முட்டை வெள்ளெலி யுமாகு
முனம் தாமயினர் தெளி வீரா லோடு வுழுவை மாகும்
உழுவையுஞ் குருங் சுட்டி நெத்திலி யுறுதி யாகும்
பழுதில்லாத
தீதுக் கெல்லாம் பகர்ந்த திட்டோம் பொது வாய்ப்
பாரு
வெழுதிய நோய்கள் கண்டு வெத்திடு வின்ன தென்று
கொழுதிய நோய்
களக் கெத்த கரியினைக் கூட்டிக் கொள்ளே
கொள்வது லோக பிரபங் கூறிய வகைக்கி தானே
யார்வது யிடைக்
கிடைக் கெந்திசூதம் திடு களஞ்சி வீதம் தள்வது
குமரிச்
சாற்றால் நாளரைத்து உண்டை செய் நள்வது செப்புக்
கிண்ணியதி
விட்டுறவியில் வையே றவியினில் வைத்த போது
நாளிகை பதினொன்
றாறைசலி விதிப்பிடித்து நீறித்தானது புகையுங்
காணும் விவே
கண்டேடுத்து யப்புரம் நிழற்குள்ளாத்து புவியே
பத்து
நாட் சென்றெத்து நீ புதுமைகேளே புதுமை கேள்
வெல்வேருகப்
போற்றிய வட்ட லோகம் புதுமை கேள்ட்டலோசம்
பூட்டிடு வியாதி

கண்டு புதுமையாங் காந்தந்தாம் பிரம் புகழ் தெமு
வங்கந்த தங்கம்
புதுமையாம் லோகம் புறநந்ததாளகமிரதங் கண்டே
கண்டு கொள்ட்டலோக மாணைங் கடந்த மித்திரம்
பூண்டு கொள்ள
கரமசூட் சம் பகர்ந்த தது மிதுவே மொப்பு யெண்டிடு
மனிடர்
பேரிலே திரத்திடு வியாதிக் கெல்லாம் முண்டிடு
முண்ட போது
புரத்திருத் தேகந்தானே தேக சிந்தாணூரத்துப்
போச்சு தேசத் தில்
வைய்த்தி யோரே தாகமே பெலத்துப் போச்சு
தரமத் தை
யிகழ வேண்டாம் மாக மாய் ......
வென்னு நாகமே யணிவும் மூர்த்தி நவினரது நாம்
விண்டேமே

விளக்கம் :

இப்பாடல் முழுமையாக இல்லை இருப்பினும் இந்தப் பாடலிலுள்ள மருந்துவகைகளை கீழே விளக்கமாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

## தேவையான மருந்துகளின் விபரம் :

1. சீரகம் ... 35 கிராம்
2. கசகசா ... ,,
3. அதிவிடயம் ... ,,
4. ஜாதிக்காய் ... ,,
5, கிறாம்பு ... ,,
6. அமுக்கிரான் வேர் ... ,,
7. காட்டுகிளுகிளுப்பை
சமூகம் ... ,,

| | | | |
|---|---|---|---|
| 8, | மிளகு | ... | 35 கிராம் |
| 9. | சுக்கு | ... | ,, |
| 10. | மாசிக்காய் | ... | ,, |
| 11. | திப்பிலி | ... | ,, |
| 12. | குருசாணிஓமம் | ... | 35 கிராம் |
| 13. | பசுவின் நெய் | ... | 200 மில்லி |

## மருந்து செய்யும் முறை

பத்து கிராம் எடை சுந்தகத்தைக் குமரிச் சாற்றில் அரைத்து ஒரு சட்டியில் போட்டு 150 சர்க்கரையை இத்துடன் கலந்து பாகு போல் ஆகும் வரைக் காய்ச்சி இதில் மேல் குறிப்பிட்டிருக்கும் கடைச் சரக்குகளை நன்கு இடித்துத் தூள் செய்து சீலை வடிகொண்டு வடிகட்டிக்கொண்டு இந்தச் சூரணத்தைப் பாகில் போட்டு நன்றாகக் கிண்டி இதில் கொஞ்சம் நெய்யையும் விட்டு மெழுகுபதம் வந்த உடன் இறக்கி இதில் 25 கிராம் தேனை விட்டுக் கிண்டி ஆறிய பிறகு பாட்டிலில் வைத்துக் கொள்ளவும்.

உட்கொள்ளும் அளவு :

ஒரு நாளைக்கு இரண்டு வேளைக்கு ஒரு கழஞ்சி அளவு வீதம் சாப்பிடவும்.

உட்கொள்ளும் காலம் :

நாற்பத்தெட்டு நாட்கள்

தீரும் வியாதிகள் :

சூளை, கிரந்தி, குட்டம், பாண்டு, சில்லிவிஷம், வாய்வு இவைகள் நிவர்த்தியாகும்.

கீழ்க்கண்ட உணவுவகைகளைச் சேர்த்துக்கொள்ளவும்

பத்தியம் :

1. முருங்கைப் பிஞ்சு, விடுதலைப்பிஞ்சு, 2. துவரம் பருப்பு 3. பிரண்டை 4. சுண்டை 5. பயறு

